1238

# தேவார மூவர் தலயாத்திரை

தி.நா. உலகநாதன்...

—ஓர் ஆய்வு



T.N. Ulaganathan..



'சைவத் தமிழ் மணி'

வித்துவான். மா. சிவகுருநாதப் பிள்ளை

சுந்தரப்பெருமாள் கோயில்

உ

*திருச்சிற்றம்பலம்*

"சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும்
இனியெதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால்
எற்றைக்குந் திருவரு ளுடையேம்"
நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்
நற்றமிழ் வேந்தனும் உய்ந்து
வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும்
மேன்மையும் படைத் தனம் என்பார்"

—சேக்கிழார்

*திருச்சிற்றம்பலம்*

# தேவார மூவர் தலயாத்திரை

## —ஓர் ஆய்வு



'சைவத் தமிழ் மணி'
வித்துவான், மா. சிவகுருநாதப் பிள்ளை
சுந்தரப்பெருமாள் கோயில்

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T



யு. சுப்ரமணியன் அறக்கட்டளை,
சால்பகம்
தஞ்சாவூர்-7

முதற்பதிப்பு : ஜனவரி 1990



விலை : ரூ. 25-00

கிடைக்குமிடம் :

திரு. பு. சுப்ரமணியன் இ. ஆ. ப. (ஓய்வு),
'சால்பகம்'
10, இரண்டாவது தெரு,
ராஜப்பா நகர்
தஞ்சாவூர்-613 007

அச்சிட்டோர் :

J. V. பிரிண்டர்ஸ், 19, அண்ணா நகர், மருத்துவக் கல்லூரி சாலை,
தஞ்சாவூர்-4
போன் : 21958

# அணிந்துரை

சேக்கிழார் அடிப்பொடி தி. ந. இராமச்சந்திரன்

கௌரவ இயக்குநர்,
அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்,
தருமபுரம்.

முத்தமிழே மூவர் முதலிகள். "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்" என்று ஆளுடைய பிள்ளையாரை ஆளுடைய நம்பிகள் போற்றுகிறார். அப்பர் அடிகள் என்பார் தமிழே. தமிழை விளித்துப் பாடுகையில், தமிழ் விடுதூது என்ற திப்பிய நூலின் ஆசிரியர் கூறுவதாவது: "திலகவதியாருடனே சென்மித்தாய்" அப்பர் அடிகளை, இன்தமிழ் ஈசர் என்றே எளியேனின் தெய்வமாம் சேக்கிழார் பெருமான் பரவுகின்றார். "நாவலூரன் சொல்" என்பது "நாடிய இன்தமிழே" என்று நம்பிகளின் திருக்கூடலையாற்றூர் தேவாரம் தெளிவு படுத்துகின்றது.

தமிழும் தமிழ்த் தென்னாடும் சிவனார் உகப்பது. "மூவர் முதலிகள் என்பார், தம் பாக்களாலே பல ஊர்களை உருவாக்கினர்" என்கின்றார் பேராசிரியர் ஏ. கே. இராமாநுசன். நால்வர் பாதம் பட்ட இடம் பவித்திரம். நாயன்மார் மேற்கொண்ட யாத்திரையே சிவநெறியும் சிவகதியுமாம்.

நடந்தே சென்று நலம் பெருகச் செய்தவர் நாவுக்கரசர். இவர் நடையை வியந்த சிவனார், முடிவிலே யாதும் சுவடுபடாமல் நடந்தருள இவருக்குப் பிரணவ தேகம் தந்தருளினார். முத்துப்பல்லக்கு இவர்ந்து பவனிவந்தவர் பாலறாவாயர். ஒரோ வழி பரியும் கரியும் ஊர்ந்து உலாப் போந்தவர், மன்னர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொலிய நின்ற நம்பி ஆரூரர்.

இம் மூவர் தலயாத்திரை பற்றிய முக்கியமான அரிய செய்திகளை, அரை நூற்றாண்டு முன்பே, திரட்டி, தொகை வகை செய்து எழுத்துப்படுத்திய பெருந்தகையார் நம் சிவத்திரு வித்துவான் மா. சிவகுருநாத பிள்ளையவர்கள். சிவ பூஜா துரந்தரராகிய இவர் அநேகமாக எல்லாத் தலங்களுக்கும் சென்று வழிபட்டவர். திருமுறைகளில் தோய்ந்து இருப்பவர். அவையிற்றைப் பாடி மகிழ்பவர். அருள் நெறித் திருக்கூட்டத்தார் மேற்கொள்ளும் அனைத்து யாத்திரைகளுக்கும் முன் கூட்டியே வரைபடம் சமைத்து, உடன் வந்து, சிவநெறி படர்தலை எளிதாக்கி வருகின்றவர்.

அரிய தகவல்கள் கொண்டதொரு சிவப்பெட்டகமாய் இந்நூல் இலங்குகின்றது. இதன் கண் உள்ள படங்களும் பட்டியல்களும் பார்த்துப் படித்துப்பயன் கொள்ளத்தக்கன. சில செய்திகள் மறு பரிசீலனைக்குரிய, என்றாலும், இவருடைய அன்பு சிவணிய பண்பின் அச்சுருவமே இச்சிறிய பெருநூல். இரு கை கூப்பி இதனை வணங்குகிறேன்.

> "ஞானநூல் தனைஓதல், ஓதுவித்தல்
> நற்பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல், நன்றா
> ஈனம் இலாப் பொருள் அதனைச் சிந்தித்தல் ஐந்தும்
> இறைவன் அடி அடைவிக்கும் எழில் ஞான பூசை."
>
> —சிவஞான சித்தியார்.

இது போன்ற நூலை வரைதல், வெளியிடுதல், ஓதுதல் சிவ புண்ணியமாம். இப்புண்ணியம், நமக்குஞ் சித்திக்குமாறு செய்த இச்சீலபுருடர், சிவம் பெருக, நெடுநாள் வாழ்க.

தஞ்சை-7
6—1—90

தி. நா. இராமச்சந்திரன்

## பாராட்டுரை

**கவிஞர் அரங்க-முத்துமணி**

செயலாளர் சைவ சித்தாந்தப் பெருமன்றம்
(தஞ்சை மாவட்டக் கிளை)

மூவர் நமக்களித்த முத்தான தேவாரம்
நாவினிலே சொல்லி நலம் கொண்டு—பூவுலகில்
தோன்றிய நற்பயனைத் துய்த்திடுவோம் இந்நூலால்
ஆன்றோரின் வாக்கே அருள் !

அப்பருடன் சம்பந்தர் ஆலால சுந்தரர் தாம்
செப்புங்கால் எப்படிச் சென்றனரோ—அப்படியே
நாம் சென்று காண நயமாய் வழி வகுத்தார்
தாம் பெற்ற பட்டறிவைத் தந்து.

என்றும் சிவத்தொண்டில் இன்பமைதக் காண்கின்ற
குன்றுபோல் அன்பாம் குணமுடையார்—அன்றலர்ந்த
செந்தா மரைமலர்தான் சிந்தும் நறுந்தேனாய்த்
"இந்தா" வெனத் தந்தார் இனிது !

புவனந்தான் போற்றும் புனிதமிகு உள்ளம்
சிவகுருநாதப்பிள்ளையைச் சேரும்—தவச்செல்வர்
இன்னும்பல நூல்கள் இமயமெனத் தான் செய்து
பொன்போல வாழ்க பொலிந்து !

பெரும்புலவர் வாழ்க ! பிறையணியும் பெம்மான்
திருவருளால் யாண்டும் சிறந்தே—திருமுறைகள்
எங்கும் பரவ இனிமைமிகு தொண்டாற்றி
மங்கலமாய் வாழ்க மகிழ்ந்து !

செந்தமிழும் நல்ல சிவநெறியும் ஓங்குதற்குச்
சந்ததமும் தொண்டாற்றச் சால்பகமும்-தந்தவர்தாம்
நந்தம்சீர் சுப்ர மணியனார் நாம் பெற்ற
செந்தமிழ் போல் வாழ்க சிறந்து !



## பாராட்டுரை

சைவசித்தாந்தமணி
வித்துவான் அம்பை இரா. சங்கரன்
பெருஞ்சொல் அகராதித் துறை,
தமிழ்ப்பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்—613005.

73-4

சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்ற 46-ஆம் ஆண்டுவிழா 1951ல் குன்றக்குடியில் திரு. ஒ. பி. இராமசாமி ரெட்டியார் அவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. அம்மாநாட்டில் 'சிதைவுற்ற சிவாலயங்கள்' என்னும் தலைப்பில் இந்நூலாசிரியர் திரு. மா. சிவகுருநாத பிள்ளையவர்கள் உரையாற்றினார்கள். அவ்வமயம் படவிளக்கங்களுடன் உரையாற்றியதைக் கண்ட மன்றத்தினர் அவ்விளக்கங்களையெல்லாம் ஒரு நூலாக வெளியிட்டால் நல்லது என்ற கருத்தைத் தெரிவித்தனர். அப்பொழுது அரும்பிய எண்ணம் பூத்து காய்த்துப் பழுத்துப் பலன்தர முப்பத்தொன்பது ஆண்டுகளாகி விட்டன. இந்நூலாசிரியரின் உறைப்பான எண்ண மேம்பாடே தற்போதாவது இந்நூல் வெளிவருவதற்கு ஏதுவாயிற்று. இந்நூல் வெளிவரத் துணையாயமைந்தவர் முன்னாள் இந்து அறநிலையத்துறை ஆணையராயிருந்த திரு. யு. சுப்பிரமணியன் அவர்கள் ஐ. ஏ. எஸ். (ஓய்வு) ஆவார். அவர்களை எவ்வளவு போற்றினாலும் தகும். அவர் செய்தக்க செய்யும் ஆற்றல் பெற்றவர்.

மேலும் 'தேவார மூவர் தலயாத்திரை' என்னும் இந்நூல் தேவாரம் ஏழுதிருமுறைகளிலுள்ள பாடல்களையும், சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணத்தையும், அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்றுள்ளது. இந்நூலாசிரியர் திருமுறைகளிடத்து மிகத் தோய்ந்தவுள்ளமுடையவர். அத்துடனன்றி தேவாரப்பாடல் பெற்ற தலங்கள் பலவற்றையும் பல்கால் சென்று நேரில் தரிசிக்கும் பேற்றினையும் பெற்றவர். பிறரையும் ஆற்றுப்படுத்தி அத்தல வரலாற்றின் பெருமையை விளக்கி நம் சமயாச்சாரியர்களின் பெருமையை மக்கள் நன்கு அறியச் செய்தவர். இவர்களே பல தல வரலாறுகளையும் எழுதியிருக்கிறார்கள். இந்நூல் வெளியிட இவர்கள் மேற்கொண்ட முயற்சிகள் அளவிடற்பாலன அல்ல. மூவர் வரலாற்றுச் சுருக்கங்கள் நூல் முதலில் காணப் பெறுகின்றன. அப்பால் மூவர் முதலிகள் தனித்தனியாகவும் சேர்ந்தும் செய்த தலயாத்திரைகள் முதலியவற்றைப் படங்கள் மூலம் விளக்கியுள்ள திறம் மிகவும் பாராட்டத்தக்கது. இதனைப் போன்ற நூலை வெளியிட மிக்க ஆர்வமும் சலியாமைக் குணமும் ஆகிய இரண்டு பண்புகளும் இயல்பாகவே தம்மிடத்து வாய்க்கப் பெற்றவர். ஆதலால் தான் இந்நூல் தற்போது வெளிவர முடிந்தது. அப்பர் பெருமான் யாத்திரை செய்த விதத்தினை ஐந்து பகுதிகளாகப் பிரித்து 11 படங்கள் மூலம் விளக்கிக்காட்டியுள்ளார். சம்பந்தர் மேற்கொண்ட பயணத்தை ஏழு பகுதிகளாகப் பிரித்து 14 படங்கள் மூலம் விளக்கியுள்ளார். சுந்தரமூர்த்திகள் மேற்கொண்ட பயணத்தை 11 பகுதிகளாகப் பிரித்து 14 படங்களில் விளக்கியுள்ளார். இந்நூலில் மொத்தம் 32 யாத்திரைவரைபடங்கள் அணி செய்கின்றன. மேலும் பாடல் பெற்ற தலங்கள் பட்டியல், வைப்புத்தலங்கள் பட்டியல், மூவரும் பாடிய தலங்களின் பட்டியல், சம்பந்தரும் அப்பரும் பாடியன, சம்பந்தரும் சுந்தரரும் பாடியன தனித்து ஒரே பதிகம் கொண்ட தலங்கள் முதலிய பல்வேறு பட்டியல்களும் இந்நூலில் காணப்பெறுகின்றன. நம் தமிழ் மறைக்கு இதனைப்போன்று பல விளக்க நூல்கள் வெளிவந்து மக்களை விழிப்புறச் செய்து ஊக்க வேண்டும். இவ்வளவு அரும்பாடு பட்டு எழுதிய இந்நூலைப்போற்ற வேண்டாவா ? தமிழுலகம் வாங்கிப் படித்துப் பயன் பெற்றால் நல்லது. சுருங்கக் கூறின் இந்நூலார் எடுத்துக் கொண்ட முயற்சிக்குப் பல முனைவர் பட்டங்கள் கொடுக்கலாம். இந்நூலாசிரியர் இதனைப் போன்று தம்பழுத்த தமிழ்ப் புலமையையும் சைவப் புலமையையும் பயன்படுத்தி மற்றும் பல பயன்தரத்தக்க நூல்களைத் தமிழுலகுக்கு அளிக்க வேண்டுகின்றேன். அதற்குத்தக்க சூழ்நிலைகளைத் தஞ்சைப் பெருவுடையார் தந்து அருள் பாலிப்பாராக.

வாழ்க உலகெலாம்.

(ஒ-ம்) அம்பை. இரா. சங்கரன்

## மதிப்புரை

பேராசிரியர் கே. ஜீ. சேஷாத்ரி
பேரகராதித்துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம்
தஞ்சை.

'தொட்டனைத் தூறும் மணற் கேணி போல மாந்தர்க்குக் கற்றனைத்தோறும் கழிபேருவகை நல்கி, நம்மை நன்னெறிக் குய்க்கும் நலமுடைய தேவாரப் பாடல்களை, முதல் ஏழு திருமுறைகளாக அருளிப் போந்த அருளாளர்களே தேவார முதலிகளான மூவரும் ஆவர்.

'முத்தமிழுக்கு மூவர்' என்று சிறப்பாகப் போற்றப் பெறும் அப்பெருமக்கள், இப்பரத கண்டத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் நேரில் சென்று அங்குறையும் பரமனைப் பரவிய பாங்கினை, முறையாகத் தொகுத்து வகைப்படுத்திக் காட்டுவதாயமைந்து. நவில் தொறும் நயம் பயந்து பொருள் சிறந்து, பயன் அளிக்கும் இந்நன்னூல், அளவில் சிறியதே யாயினும் சைவசமய இலக்கிய ஆய்வியல் அடிப்படையில் அமையப் பெற்றதோர் வரலாற்றுப் பெட்டகமேயெனல் சாலும்.

தஞ்சை அருள்நெறித் திருக்கூட்டத்தினரால் திங்கள் தோறும் மேற்கொள்ளப் பெற்று வரும் தேவாரத் தலயாத்திரையில் அடிக்கடி கலந்து கொள்ளும் பேறு பெற்ற நான், அப்போதெல்லாம் இந்நூலாசிரியர் அந்த யாத்திரைகட்கு ஏற்றதொரு வழிகாட்டியாய்த், திகழ்ந்து, தலங்களின் வரைபடம் வரைந்து, தல வரலாறுகளின் மாண்புகளை விதந்துரைத்தலைக் கண்டும் கேட்டும் அன்னார் தம் நுண்மாண் நுழைபுல ஆற்றலை எண்ணி வியந்ததுண்டு.

அன்னாரின் பன்னூல் பயிற்சி மட்டுமன்றி, பரந்து பட்ட பட்டறிவும், தலங்கட்குப் பன்முறை நேரில் சென்று பெற்ற பேரறிவும், இந்நூலைச் செந்நூலாகச் சைவசமய உலகிற்குத் தர இயன்றது எனின் அது மிகையன்று. அண்மையில் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் குறுகிய கால ஆய்வுத் திட்டத்தின் அடிப்படையில் அன்னார் படைத்தளித்த 'சிவ வடிவங்கள்' எனும் அரிய நூல் சைவத்திற்குக் கிடைத்த மற்றுமொரு கருவூலம் ஆகும்.

அன்னார் சைவத்தமிழ்ப்பணி தொடர்ந்து சிறக்கவும், இது போன்ற நன்னூல்களைத் தொடர்ந்து வெளியிடும் வகையில் திருமிகு. யு. சுப்பிரமணியன், ஐ.ஏ.எஸ் (ஓய்வு) அவர்களின் சால்பகம் சிறந்து வளரவும் சிவனருள் சித்திப்பதாகுக.

(ஒ-ம்) கே. ஜீ. சேஷாத்ரி

# வாழ்த்துரை

*முருகர் சரணம்*

வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன்
நூலாசிரியர் : *"அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்...
திருப்புகழ் தலப்பயணம்
முழுதும் அழகிய குமரன்"*

35, முருகப்ப முதலித்தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.

*உனதடியவர் புகழ் ஆய்ந்த நூலினர்
உயர்கதி பெற அருளோங்கு மாமயில் உறைவோனே*
(கூந்தலூர் திருப்புகழ்)

செந்தமிழ் மறையாகிய "தேவாரம்" சிவபெருமான் அணிந்துள்ள திருவாபரணங்களில் பதக்கம் போல் ஒளி வீசிப் பிரகாசிக்கின்றது. சைவ சமயத்தின் சிறப்பையும், உயர்வையும், இறைவன் அருளாடல்களையும் போற்றுவதோடு தமிழ்நாட்டு வரலாற்றுப் பேரிலக்கியமாகவும், வழிகாட்டி நூலாகவும் திகழ்கின்றது. தேவாரத்தின்கண் நூற்றுக்கணக்கான திருவூர்களின் பெயர்கள், ஆங்காங்குள்ள திருக்கோயில் சிறப்பு, வளங்கள், ஆறுகள், குளங்கள், திருவிழாக்கள், ஆள்வோர், ஆளப்படுவோர் வாழ்க்கை வரலாறு முதலிய பலவும் விளக்கமுறக் காணலாம். தேவாரம் தென் தமிழ்நாட்டுத்தெய்வ இலக்கியம்.

"தேவார மூவர் தலயாத்திரை" எனும் இந்நூல் ஒரு சிறந்த தலயாத்திரை வழிகாட்டி நூல். உயர்ந்த ஆய்வுக் கருவூலம். தேவார மூவர் மேற்கொண்ட தல யாத்திரைகளை நன்கு ஆய்வு செய்து, பெரிய புராணத்தின் துணை கொண்டு விளக்கப்படங்களுடன் விவரித்துள்ளது மிகவும் பெரிய பணியாகும்.

'சைவத் தமிழ்மணி' சுந்தரப்பெருமாள்கோயில் திரு மா. சிவகுருநாதப்பிள்ளையவர்கள் அப்பர் பெருமான் அருள் வாக்கிலே ஊறித் திளைத்தவர். "வானோர் இனந் துருவி மணி மகுடத் தேறத்துற்ற இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாயப்பில்கி நனைந்தனைய திருவடியை" அப்பர் சுவாமிகளின் தலைமேல் வைத்தருளிய நல்லூர் எம்பெருமானிடம் ஆறாக்காதல் கொண்டவர். அடிக்கடி சென்று திருநல்லூர் இறைவனை வணங்கி இன்புறுவார். பல்லாண்டுகளின் பயனுர் உழைப்பும், தவநிலையும், மொழிப்புலமையும் ஒருங்கமைந்த நம் சிவத்திருவினர் திருவாளர் பிள்ளையவர்கள் இத்தகைய அரும் நூலை ஆக்கிப்பெரும் சிவத்தொண்டினைப் புரிந்துள்ளார். அவருக்கு நன்றியையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இலக்கிய ஆர்வம் மிக்க பெருந்தகையாளர் இந்து சமய அறநிலையத்துறையின் முன்னாள் ஆணையர் உயர் திருவாளர் யு.சுப்ரமணியன், I.A.S., (ஓய்வு) அவர்கள் மிக்க விருப்பத்துடன் அன்னாரது அறக்கட்டளையின் சார்பில் இந்நூலை வெளியிடுவது போற்றுதற்குரிய செயலாகும். அவர்கள் அத்துறையில் பணியாற்றிய காலத்தில் தமிழ்மொழி இலக்கியத்தில் அமைந்துள்ள அரிய சித்திரக் கவிகளை, பாமரர்களும் பார்த்துப்படித்து இன்புறும்வண்ணம் எளிங்குச் சித்திரமாகவே அமைத்தும், பல அரிய இலக்கிய நூல்களை வெளியிட்டும் பெரும்பணி செய்கல்லில் துள்ளார். இலக்கிய அன்பர்கள், அறிஞர்களின் அருமை தெரிந்தவர். அவர் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டமைக்கு, சைவ நல்லுலகம் நன்றி கூறக் கடமை பட்டுள்ளது. அவர் பல்லாண்டுகள் வாழ்ந்து இன்னும் பல இலக்கியப்பணிகள் புரிய இறைவன் திருவருளைப் போற்றுவோம்.

*'நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்து கோயிலாக் கொள்வானே'*

என்று திருமூலர் அருளியுள்ளது போல் திருக்கோயில்களுக்குச் சென்று வழிபட்டால் சரியையாளராகவும் கிரியையாளராயும் சிவஞானம் பெற்ற சிவயோகச் சீலராகவும் வாழலாம். திருக்கோயில் வழிபாட்டால் கோயிலும் பொலிவுறும் ; சமயமும் செழிக்கும் ; கலையும் வளரும் ; மக்கள் மனமும் பண்படும் ; வாழ்வும் உயரும்.

வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன்

## திருமுறைகள் — சில விவரத் தொகுப்புகள்

| | திருமுறைகள் 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | மொத்தப் பதிகங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. பாடல் பெற்ற மொத்தத் தலங்கள் | 135 | 120 | 121 | 50 | 76 | 65 | 84 | 785 |
| 2. இடம் பெற்ற பாடல்கள் | 1469 | 1331 | 1347 | 1070 | 1015 | 981 | 1024 | 8238 |
| 3. இடம் பெற்ற பண்கள் | 8 | 6 | 9 | 10+2? | 1? | 1? | 17 | 785 |
| 4. இடம் பெற்ற பதிகங்கள் | 136 | 122 | 125 | 113 | 100 | 99 | 100 | 785 |

### 28 பண்களும் 785 பதிகங்களும்

| | |
|---|---|
| 1. மூவர் பாடிய பண்கள் — 8 | இந்தளம் 54, காந்தாரம் 40, குறிஞ்சி 34, பழம்பஞ்சுரம் 27, காந்தார பஞ்சமம் 26, கொல்லி 27, சீகாமரம் 20, பியந்தைக் காந்தாரம் 16 |
| 2. அப்பரும் சம்பந்தரும் — 2 | சாதாரி 34, பழந்தக்க ராகம் 18 |
| 3. சம்பந்தரும் சுந்தரரும் — 8 | நட்டராகம் 30, தக்கேசி 29, தக்க ராகம் 28, நட்டபாடை 27, பஞ்சமம் 16, கௌசிகம் 14, கொல்லிக் கௌவாணம் 10, புறநீர்மை 9 |
| 4. சம்பந்தர் மட்டும் — 5 | வியாழக்குறிஞ்சி 10, செவ்வழி 10, மேகராகக் குறிஞ்சி 7, அந்தாளிக் குறிஞ்சி 2, யாழ் மூரி 1 |
| 5. அப்பர் மட்டும் — 4 (யாவினம்?) | திருநேரிசை 57, திருவிருத்தம் 34, திருக்குறுந்தொகை 100, திருத்தாண்டகம் 99 |
| 6. சுந்தரர் மட்டும் — 1 | செந்துருத்தி-1 |

முதல் தேவாரப் பதிகம் பெற்ற தலம் — திருவதிகை — அப்பர்

இறுதியாகத் தேவாரப் பதிகம் பெற்ற தலம் — திருநொடித்தான்மலை — சுந்தரர்

அதிக தேவாரப் பதிகங்கள் பெற்ற தலம் — சீகாழி — சம்பந்தர்

தொகுப்பு : 'சிவத்திரு'

### பிழைத் திருத்தம்

பக்கம் 18 வரி 22 'பெரும்பாலும் தனியொரு தலத்தினை' என வாசிக்கவும்

பக்கம் iv/4 வரி 28 திருப்புவணம் → திருப்பூவணம்

யு. சுப்ரமணியன் இ. ஆ. ப. (ஓய்வு)
சால்பகம்,
10, இரண்டாம் தெரு
இராசப்பா நகர்
தஞ்சாவூர்-7

'தேவார மூவர் தலயாத்திரை-ஓர் ஆய்வு' என்னும் இவ்வாய்வேடு, இருங்கடல் வையம் செய் புண்ணியத்தால் அவதரித்து, பரம்பொருளாம் சிவனை, வாயாரப் பன்னி ஆதரித்து, ஏத்தியும் பாடியும் வழிபட்டும் மகிழ்ந்து பேறு பெற்ற அப்பர் சம்பந்தர் சுந்தரர் ஆகியோரின் யாத்திரை முறைமையினைத் தேவாரம் மற்றும் பெரியபுராணம் ஆகிய வற்றின் துணை கொண்டு தயாரிக்கப் பெற்றுள்ளது.

இந்நூலினை, திருப்பூவனூர், திருவலஞ்சுழி, திரு நல்லூர், திருப்பாலைத்துறை, திருக்கருகாவூர், திருஅவளிவ நல்லூர் ஆகிய தேவாரத் தல வரலாறுகளைப் பதிப்பித்த வரும், 'சிவவடிவங்கள்' என்னும் சீரிய தலைப்பில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சிறந்ததொரு ஆய்வேட்டை அளித்த வருமான சைவத் தமிழ்மணி. வித்துவான் மா. சிவகுருநாதப் பிள்ளையவர்கள் மிகச் சிறப்பான முறையில் ஆய்ந்து தொகுத்தளித்துள்ளார்கள்.

நான் அறநிலையத்துறைஆணையராய்ப் பணியாற்றிய போது அன்னாரின் 'ஆயிரம் பிறை கண்ட அரசு' என்னும் ஆய்வுக்கட்டுரையைப் பார்வையிட்ட போது அவர்தம் சைவசமயப் பற்றையும் ஆய்வுப் புலமையினையும் நன் கறிந்தேன்.

பெரிய புராண உரையாசிரியராக சிறப்பித்துப் பேசப் பெறும் சிவக்கவிமணி CKS அவர்களுடன் நெருங்கிப் பழக வும், அன்னாருடன் பல தலங்கட்கு, சேக்கிழார் குறித்த நெறியில் சென்று பார்த்து ஆய்வு செய்யும் வாய்ப்பினைப் பெற்றவர் இந்நூலாசிரியர். அந்த பட்டறிவும், சைவ இலக்கிய நூலறிவும், இந்நூலைப் படைப்பதற்குப் பெரிதும் உதவியுள்ளன என்பதை இந்நூலைப் பயில்வோர் நன் குணரலாம்.

மூவர் யாத்திரையை முறைமையாக விளக்கிப் பட்டிய லிட்டுக் காட்டுவதோடு அந்நெறியில் யாத்திரை மேற் கொள்ள விழைவோர்க்கு உதவியாக வரைபடங்களுடன் இந்நூல் அமையப் பெற்றுள்ளது தனிச்சிறப்புடையதாகும். இவ்வரிய நூலினை சைவ நன்மக்கள் வரவேற்றுப் பயின்று பயன் அடைய வேண்டுகின்றேன்.

தஞ்சாவூர்
10—1—90

(ஒ-ம்) யு. சுப்ரமணியன்

## நன்றியுரை

* இவ்வாய்வு நூலினை ஏற்றமிகு முறையில் பதிப்பித்து வெளியிட ஆவன அனைத்தும் செய்துதவிய 'யு. சுப்ரமணியன் அறக்கட்டளை' நிறுவனரும், முன்னாள் அற நிலையத்துறை ஆணையருமான திருமிகு யு. சுப்ரமணியன் ஐ. ஏ. எஸ் (ஓய்வு) அவர்களுக்கும் ..

* இந்நூல் வெளிவரப் பல்லாற்றானும் முயன்று, தேவையான பிளாக்குகளைச் சென்னையில் தயாரித்து அனுப்பியும் அணிந்துரை அளித்தும் உதவிய திருப்புகழ்த்தொண்டர். வலையப்பேட்டை திருமிகு ரா. கிருஷ்ணன் அவர்களுக்கும்,

* இந்நூல் ஏற்றம்பெற, தக்க ஆலோசனைகள் நல்கி, அணிந்துரையும் அளித்துதவிய 'சேக்கிழார் அடிப்பொடி' திருமிகு. தி. ந. இராமச்சந்திரன் அவர்களுக்கும்......

* மதிப்புரை வழங்கிய சைவசித்தாந்தமணி திருமிகு. அம்பை இரா. சங்கரனார் அவர்களுக்கும், பேராசிரியர் திரு. K.G. சேஷாத்ரி அவர்கட்கும், பேரா.த.கோ. பரமசிவம் அவர்கட்கும், பாராட்டுப்பா நல்கிய கவிஞர் அரங்க. முத்து மணி அவர்கட்கும்......

* வெகுநாட்களுக்குமுன் வரைந்து எழுதப்பெற்ற இந் நூலினை இப்போது செம்மைப்படுத்தி நூல் வடிவாக்க எனக்குத்துணை நின்ற, தஞ்சை மன்னர் சரபோசி அரசு கல்லூரியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றும் என்மகன் சிவ. திருச்சிற்றம்பலத்திற்கும்.

* இந்நூலாக்கத்திற்குப் பெருந்துணையாய் நின்ற தஞ்சை சைவசித்தாந்தப் பெருமன்றம், மற்றும் தஞ்சை அருள்நெறித்திருக்கூட்ட அன்பர்கட்கும்.

* இந்நூலைச் செந்நூலாய்ச் செவ்விய முறையில் அச்சிட்டுதவிய தஞ்சை J.V. பிரிண்டர்ஸ் நிறுவனத்திற்கும், குறிப்பாக, இந்நூல் அச்சிடப் பெற்ற பொழுது, நூலின் அமைப்பிற்கு, ஏற்ற பல ஆலோசனைகளை நல்கியுதவிய பேராசிரியர் திரு. க. வைத்தியநாதன் அவர்கட்கும், என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியதாகும்.

* சிறப்பாக, தம் பல்வேறு பணிகளுக்கிடையேயும் இந்த நூலை இந்தியக் குடியரசு நாளான 26—1—90 அன்று வெளியிட்டு, சிறப்புரையாற்ற இசைந்த தஞ்சை மாவட்ட ஆட்சியர் திருமிகு. டி. ஆர். இராமசாமி ஐ. ஏ எஸ் அவர்கட்கும், நூலின் முதற்படியினைப் பெறுவதற்கு இசைவளித்த தஞ்சை அரண்மனை, பரம்பரை அறங்காவலர் திருமிகு.பாபாஜிராஜாபான்ஸ்லே அவர்கட்கும் எளியேனின் இதய நன்றியை உரித்தாக்குகிறேன். நன்றி

நூலாசிரியன்

உ

# முன்னுரை

## ஆலய வழிபாடு

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி" மூத்த சமயம் நம் சைவ சமயமாகும். காலத்தால் மட்டுமன்றி தன்னிகரற்ற சைவசித்தாந்தக் கோட்பாட்டு நெறியால் பிற சமயத் தத்துவங்கட்கெல்லாம் தலையாயதாகவும் பொலிந்திலங்கும் பெற்றியதாகும். அவ்வகையில் நம் முன்னோர்கள், தென்னாடுடைய சிவனாய் எந்நாட்டவர்க்கும் இறைவனாகச், சிறந்தொளிரும் சிவபரம்பரம் பொருளுக்கு, பரத கண்டத்தில் மட்டுமின்றி, உலகின் பல்வேறு பகுதிகளிலும், கோயில் அமைத்து வழிபாடியற்றி பேறு பெற்று வந்துள்ளனர். 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' 'ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே' என்பன முதுமொழிகளன்றோ ?

## விண்ணவர் வழிபாடு

'வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன் தனை அருச்சிருப்பர்' எனவரும் சித்தியார் வரிகள் மண்ணகத்தோர் மட்டுமல்லாமல், விண்ணகத்துறையும் தேவர்களும், இப்பூவுலகிற்கு வந்து, பரமனைப் பூசித்து சிவபுண்ணியத்தை பெற்றுள்ளனர் என்பதை உணர்த்துகின்றது. "புவனியில் போய்ப் பிறவாமையில் நாள் நாம் போக்குகின்றோம் அவமே" என விண்ணவர் கூறி இறைவனைப் பரவி, உய்ந்ததைப் பேசுகின்றார் மணிவாசகர்.

## யாத்திரையின் தொன்மை

இம்மண்ணுலகில, சிவனுறையும் செழும்பதிகள் தோறும் யாத்திரையாகச் சென்று, வழிபட்ட நெறியின் தொன்மை, சூரபதுமனை வென்று தேவர் சிறை மீட்க. திருக்கயிலைமால் வரையினின்று புறப்பட்ட கந்தவேள், செந்திற்பதிவரை பலதலங்களைத் தரிசித்து வந்தார் என்பதைக் கந்தபுராணமும்; பாண்டவருள் சிவபூசகனாகிய வில்விசயன், இமய முதல் குமரிவரை தலங்கள் பலவற்றை யாத்திரையாய்ச் சென்று தரிசித்த செய்தியை,

"பத்திக்கு வரம்பாகிய பார்த்தன்' பலதீர்த்தம்
அத்திக்கினும் எத்திக்கினுமா மென்றவை
நாடிச், சித்திக்கொரு விதையாகிய தென்
னாட்டினை அணுகித், தத்திச்சொரியரு
வித்தர வக்கிரிசார்ந்தான்".

என வில்லி பாரதம் கூறுதலானும்;

கயிலைமால் வரையில், நந்தியருள் பெற்று திருமூலர் என்று பின்னர் சிறப்பிக்கப்பெற்ற சிவயோகி, வடபுலத்திலிருந்து தென்னகப்பதியான திருவாவடுதுறை வரும்வரை, வழியிடை பலதலங்களை வணங்கிப் போந்ததைப் பெரிய புராணமும், நில உலகைச் சமன் செய்ய வேண்டி வடக்கிலிருந்து தெற்கு நோக்கி யாத்திரையாகச் செந்தமிழ் முனிவர் அகத்தியர் வந்ததைப் புராணங்கள் பலவும் கூறுவதிலிருந்து தலயாத்திரையின் தொன்மையினை நாம் நன்குணரலாம்.

## மூவர் தனிச் சிறப்பு

தற்காலம் போல், தரைவழி, நீர்வழி, விண்வழி, விரைந்து செல்லும் பயணவசதிகள் இல்லாக்காலத்தே சைவ வைணவ அடியார்கள் பலர் யாத்திரையை மேற்கொண்டனராயினும்; தேவார மூவர் போல் திட்டமிட்ட முறையான பயனத்திணை அவர்கள் மேற்கொண்டிலர். அவ்வாறு மேற்கொண்டிருப்பினும், அன்னார் யாத்திரையினை பெரிய புராணம் நிரல்படுத்திக் கூறுமாப் போல், வேறு நூல்கள் எதுவும் விளக்கிக்கூறவில்லை என்பது தேற்றம்.

## நூல்கள் எழுதத் தூண்டிய நிகழ்ச்சிகள்

இத்தேவார மூவர் மேற்கொண்ட யாத்திரையினை, முறையாய் விளக்கமாய், எடுத்துரைக்கும் தெய்வப்புலவர் சேக்கிழாரின் வழி நின்று தரைப்பட விளக்கங்களுடன் வரைந்து விளக்கியுரைக்கும் இந்நூலினை ஆக்குதற்கு, இளமைப் பருவத்தே என் தந்தையார் சிவபூசைச் செல்வர் மாதுசாமிப் பிள்ளை அவர்கள், தேவாரத் தலங்கட்கு என்னை உடன் அழைத்துச் சென்று ஆற்றுப்படுத்தியமையும், தேவாரத் தலயாத்திரையையே தன் வாழ்நாள் பயனாகக் கொண்டொழுகிய என் தந்தையாரின் நண்பர் தஞ்சை மாரியம்மன் கோயில் யாத்திரை வாசிமுத்து என்னும் பெரியவர், தொடர்பும் என் வயது இருபத்து மூன்றுக்குள் பெரும்பகுதி மிதிவண்டிமூலமும், சிலவிடத்தில் பேருந்து, தொடர் வண்டிப்

பயணமூலமும் சென்று தரிசித்த நூற்று எண் பதுக்கும் மேற்பட்ட தலங்களைப் பற்றி அவ்வப்போது விளக்கப் படங்களுடன் குறித்து வைத்த குறிப்புகளும்; மேற்படி குறிப்புகளைக் கண்ணுற்ற 'திருக்குறட் சொல்லடைவு' நூலாசிரியர் அமரர், தமிழ்மணி. சாமிவேலாயுதம் பிள்ளை அவர்கள், தேவார மூவர் தலயாத்திரை பற்றி விளக்கி வரையுமாறு ஆக்கமும் ஊக்கமும் உந்தமையும், பெருந்துணை புரிந்தன எனின் அது மிகையன்று.

## நூலின் பகுப்பு முறை

'தேவார மூவர் தலயாத்திரை-ஓர் ஆய்வு' எனும் இந்நூல் ஏழு பிரிவுகளாகப் பகுத்து எழுதப்பட்டுள்ளது.

முதற்பகுப்பு தேவார மூவரின் வரலாற்றுச் சுருக்கமும் பிற செய்திகளும் கொண்டதாகவும்;

இரண்டாம் பகுப்பு மூவரும் மேற்கொண்ட தலயாத்திரை முறைமைகளை விளக்குவதாகவும்;

மூன்றாவது பகுப்பு பாடல் பெற்ற தல விவரத்தொகை விவரப்பட்டியலாகவும்; நான்காவது பகுப்பு பெரியபுராணம் வகுத்துரைக்குமாப்போல் மூவரும் சென்று முறையாக வழிபாடியாற்றிய தலங்கள் மற்றும் பதிகக்குறிப்புகளை உடையதாகவும்;

ஐந்தாவது பகுப்பு சமகாலத்தில் வாழ்ந்த அப்பர் சம்பந்தர் யாத்திரையினை, ஐவகை நிலைகளில் விளக்குவதாகவும் ;

ஆறாவது பகுப்பு தேவாரப்பாடல் பெற்ற பதிகளின் குறிப்பினை, விளக்குவதாகவும் ; ஏழாவது பகுப்பாக வைப்புத் -தலங்களின் பட்டியலாகவும், பின் இணைப்பு அப்பர்-சம்பந்தர் கால ஒப்பீட்டுப் பட்டியலாகவும் அமையப்பெற்றுளது. சான்றோர்கள் இந்நூற்கண் உள்ள நிறைகளை ஏற்று, குறைகள் காணப்படின், அடுத்த பதிப்பில் அவற்றைத் திருத்திப் பதிப்பிக்க ஏதுவாக பிழைகளைச் சுட்டிக்காட்டினால், நன்றியுடையவனாவேன்.

## புரவலர் அறிமுகம்

இந்நூலினை யான் எழுதி நாற்பதாண்டுகட்கு மேலாயினும், 1984 ஆம் ஆண்டு திருப்புகழ்த்தொண்டர் வலையப்பேட்டை திரு. ரா. கிருஷ்ணன் அவர்கள் அந்நாளில் தமிழக அறநிலையத்துறை ஆணையர் பொறுப்பில் இருந்த திருமிகு. யு. சுப்ரமணியன் ஐ. ஏ. எஸ் அவர்களிடம் என்னை அறிமுகம் செய்வித்து, அன்னாரை இவ்வாய்வு நூலையும், அடியேனின் 'ஆயிரம் பிறை கண்ட அப்பர்' என்னும் பிறிதொரு எழுத்துப்படியையும் பார்வையிட ஆவன செய்து உதவினார்கள்

## சான்றோரின் தமிழ்ப் பணி

அரசுப் பதவியினின்றும் ஓய்வு பெற்ற அன்னார், தஞ்சையில் தமிழ்ச் சங்கம் நிறுவியதோடு, அதன் புரவலராகித் திங்கள் தோறும் இலக்கியச் சொற்பொழிவுகள் முறையாக நடைபெறச் செய்தும், சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் தஞ்சை மாவட்டக் கிளையினைத் தோற்றுவித்து, அதன் தலைவராகப் பொறுப்பேற்று, தொடர் சமய சொற்பொழிவுகளைத் தக்காரைக் கொண்டு முறையாக நிகழ்த்துவித்தும், பெருந்தொண்டுகளாற்றி வருதலோடு, சமயம் மற்றும் சமுதாயம் தொடர்பான நூல்களைஎழுதும் சிறந்த படைப்பாளராகவும் திகழ்ந்து வருகின்றார்.

## பதிப்பாளராக......

மேலும் 'யு. சுப்ரமணியன் அறக்கட்டளை' எனும் நிறுவனத்தினைத் தம்சொந்தப் பொறுப்பில் நிறுவி, 'சால்பகம்' சார்பாக, தமிழ் மொழி, சமயம், கலை, வரலாறு, தொடர்பான பலதுறைகளில், பயன்தரு நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றார்.

அவ்வகையில் இச்சிறு நூலை செவ்வனே பதிப்பித்து, அதனைத் தஞ்சை மாவட்ட சைவ சித்தாந்தப் பெருமன்ற அவையில், தஞ்சை மாவட்ட ஆட்சியர் திருமிகு. டி ஆர். இராமசாமி ஐ. ஏ. ஸ் அவர்களைக் கொண்டு வெளியிடவும், தஞ்சை அரண்மனைப் பரம்பரை அறங்காவலர், நூலின் முதற்படியைப் பெற்றுக் கொள்ளவும், பல்லாற்றானும் முன்னின்று ஏற்பாடுகளைச் செய்துதவிய அப்பெருமகனார்க்கு என் உளம் கனிந்த நன்றியை உரித்தாக்குவதோடு அன்னார் பன்னலனும் பெற்றுப் பல்லாண்டு காலம் வாழ்வாங்கு வாழ்ந்திட என் ஆன்மநாயகனான இடைமருது றையும் எந்தைபிரான் தன் இணையடிகளைப் போற்றி யமைகின்றேன். நன்றி. வணக்கம்.

அன்பன்,

வித்துவான் மா. சிவகுருநாதப் பிள்ளை

சுந்தரப்பெருமாள் கோயில்.

## பொருளடக்கம்





# பிழை திருத்தம்

| பக்கம் | பத்தி | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 3 | 2 | 9 | தேய்த்து | தேய்ந்து |
| 4 | ,, | 29 | இவர் | இவரது |
| 6 | 1 | 29 | சம்பத்தரே | சம்பந்தரே |
| 6 | 1 | 30 | இமைத் | இளமை |
| 7 | 2 | 30 | ஆருரை | ஆரூரை |
| 12 | 2 | 19 | கிரகஸ்த | இல்லற |
| 15 | 1 | — | கமாம்புலியூர் | ஓமாம்புலியூர் |
| 16 | 1 | 24 | கானும் | காணும் |
| 17 | தலைப்பில் திருநாவுக்கரசர் எனச்சேர்க்கவும் | | | |
| 21 | ஊர்ப்பெயர் | 6 | தூங்கனைமாடம் | தூங்கானைமாடம் |
| 41 | வரிசை எண் | 9 | 9 | 95 |
| 42 | ,, | 5 | 08 | 108 |
| 48 | | 19 | தரிசித்தார் | சந்தித்தார் |
| 57 | ஊர்ப்பெயர் | 5 | பமுவூர் | பழுவூர் |
| 62 | ,, | 11 | திருந்னா | திருநணா |
| 69 | தலைப்பு 12 இல் | 10 | வனிகனை | வணிகனை |
| 72 | ஊர்ப்பெயர் | 24 | திருச்களர் | திருக்களர் |
| 86 | ,, | 5 | திருத்திறையூர் | திருத்துறையூர் |
| 95 | 2 | 19 | பாவையுன் | பரவையுண் மண் ளி |
| 104 | ,, | 12 | அவனிநல்லூர் | அவளிவநல்லூர் |
| 109 | ,, | 7 | சோழபுரம் | சோபுரம் |
| 110 | 85வது ஊர்ப்பெயர் | | பந்தனை நல்லூர் | பந்தணை நல்லூர் |
| 112 | 122 ,, | | திருப்பாப்புரம் | திருப்பாம்புரம் |

விடுபட்ட வரி

பக்கம் 76ல் ஐந்தாவது வரியாக
165 திருப்புனவாம் – 271—மாதமர்மேனி–கா.ப– ப – 8— 20—886– 1
எனச் சேர்த்து வாசிக்கவும்.

திருச்சிற்றம்பலம்

# தேவார மூவர் தலயாத்திரை

## மூவர் தமிழ்

தருஉலகநாதன்

### மூவர் தொண்டு

"நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழி லொழுகும் சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டத்தின் தென்முனையிலிருந்து வடகயிலை வரை, யாத்திரையாகச் சென்று 'சைவத்தின் மேற்சமயம் வேறில்லை அதிற்சார் சிவமாம் தெய்வத்தின் மேற் தெய்வம் இல்" லெனும் நான் மறைச் செம்பொருள் வாய்மையினை, தாம் நவிற்றிய செந்தமிழ்ப் பதிகங்களின் வாயி லாகப் பூவுலக மக்களுக்கு உணர்த்திச் சென்ற புண்ணிய மூர்த்திகளே, திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய தேவார முதலிகள் மூவரும் ஆவர்.

### பன்னிரு திருமுறை

சைவ சமயத்தின் திருமாமறைகள் எனப் போற்றப்பெறும் பன்னிரு திருமுறைகளுள், மூவர் அருளிய பதிகங்கள் அனைத்தும் சப்த கோடி மகா மந்திரங்களைப் போன்றும், மற்றும் பஞ்சப் பிரமஷடாங்க மந்திரங்கள் பதினொன்றில் முதல் ஏழு மந்திரங்களைப் போன்றும் முதல் ஏழு திருமுறைகளாகப் பொலிவுடன் தொகுக்கப் பெற்றுள்ளன.

### அடங்கன் முறை

பாதியோர் பெண்ணை வைத்த பரமனைப் பரவும் பாங்குடைய முதல் ஏழு திருமுறை களும் பொதுவாகத் 'தேவாரம்' என்வும் 'அடங்கன் முறை' எனவும் குறிக்கப் பெறும் ஆயினும், காழி வள்ளல் ஞானசம்பந்தரின் முதல் மூன்று திருமுறைகள் 'திருக்கடைக் காப்பு, எனவும் நற்றமிழ் வல்ல நாவுக்கரைய ரின்நான்கு ஐந்து ஆறா ந்திருமுறைகள் 'தேவா ரம்' எனவும், தம்பிரான் தோழரான நம்பியாரூர ரின் ஏழாந் திருமுறை 'திருப்பாட்டு' என்வும், ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் களால் சிறப்பாகக் குறிக்கப் பெறும் சீர்மை யுடையன என்பதொரு செவி வழிச் செய்தி ஆகும்.

### பெரிய புராணம்

மாதொர் கூறனைப் பாடிப்பரவு மூகத் தான் மூவரும், கனித்தனியாகவும், அப்பரும் சம்பந்தரும் சிற்சில சமயங்களில் இணைந்தும் தலங்கள் தோறும் யாத்திரையாகச் சென்று, பிறப்பறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல் களைப் போற்றிய செய்திகளை முறையாகத் தொகுத்துரைக்கும் முதனூலாய்ந் பொலிவதே பன்னிரண்டாம் திருமுறையான 'பெரிய புராணம்' என்னும் திருமுறையாகும்.

### தலயாத்திரை

அம்மாமறையாம் திருத்தொண்டர் புராண வழி நின்று சிவனுறையும் செழும் பதிகள் தோறும், மூவரும் சென்று வழிபாடியற்றி, செந் தமிழ்ப் பதிகம்பாடிய சிறப்பினை, முறையாகத் தலயாத்திரைப் பட்டியலாக வரைபடங்களுட னும், பதிக மற்றும் பண்முதலாம் அனைத்துக் குறிப்புக்களுடனும், தொகுத்துரைக்கும் நோக் குடன் அமையப் பெற்ற இவ்வாய்வேட்டில், முதற்கண் மூவர் வரலாற்றையும் ஒரு சிறிது நோக்கி மேற்செல்வோமாக.

# திருநாவுக்கரசர் வரலாறு

*நாவுக்கரசர் மாண்பு*

"திரு நின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக் கரையன்றன் அடியார்க்கு மடியேன்" என்று நம்பியாரூரால் போற்றப் பெறும் திருநாவுக்கரசர், அறுபான் மும்மை நாயனார் வரிசையில் பத்தொன்பதா மவராகவும், சைவசமயாசாரியார் நால்வருள் இரண்டாமவராகவும், வைத்து ஏத்தப்பெறும் மாண்பினை யுடையவர் ஆவார்.

*மருணீக்கியார்*

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க, ஆறும் நூற்றுண்டின் பிற்பகுதியில் பிறந்து, ஏழாம் நூற்றுண்டின் முற்பாதிவரை எண்பத் தோரு ஆண்டுகள் வாழ்ந்து, ஆயிரம் பிறை கண்ட அப்பர் பெருந்தகை அவதரித்த தலம், நடு நாட்டின் ஒரு பகுதியாக விளங்கிய திரு முனைப் பாடி நாட்டுத் திருவாமூராகும். இவரது தந்தையார் வேளாண் குலத்துதித்த புகழனுர். தாயார் மாதினியார். தமக்கையார் திலகவதியார். இளமையில் பெற்றோர் இவருக்கு இட்ட பெயர் மருள்நீக்கியார் ஆகும்.

*திலகவதியார்*

இவரது தமக்கை திலகவதியாருக்கு வயது பன்னிரெண்டாண்டில் மணமுடிக்க நிச்சயித் திருந்த திறல்வீரர் கலிப்பகையார், திருமண முடியும்முன் போர் மேற் சென்றுர். இதன்பின் பெற்றோர் மறைந்தனர். மற்றும் போர் மேற்சென்ற கலிப்பகையாரும் போரில் உயிர்துறந்தார் இதனால் திலகவதியார் உயிரைவிட முற்பட, மருள்நீக்கியார் தடுத்து உயிர் வாழச் செய்தார்.

*தருமசேனர்*

இந்நிகழ்ச்சிகள் யாவும் மருள் நீக்கியார் உள்ளத்தில் நிலையாமைத் தன்மையினை உணர்த்தவே, தம் உடைமைகள் அனைத் தையும் அறத்தின்பால் செலவிட்டார். அத் துடன் சமயங்களானவற்றின் நல்லாறு தெரிந் துணர, நம்பர் அருள் இல்லாமையால் கொல் லாமை மறைந்தொழுகும், சமண சமயம் சார்ந்து தருமசேனர் என்னும் பெயருடன் பாடலிபுத்திர நகரில் சமண் பாழியில் இருந்து அச்சமய ஆக்கத்தின் தலை நின்றுர்.

*திருநாவுக்கரசர்*

இதனால் திருவதிகையில் சிவத்தொண்டு செய்து வந்த இவரது தமக்கையார் வருந்தி சிவபிரானிடம் தம் தம்பி சைவம் புக, நாளும் வேண்டி நின்றுர். இதன் காரணமாய் நாவர சருக்குச் சூலைநோய் வந்து யாவராலும் தீர்க்க முடியாது போகவே, பின் தமக்கையார் பால் வந்து சரண்டைந்தார். திலகவதியார் திருவா ளன் திரு நீற்றைக் கொடுத்து, திருவதிகை வீரட்டானேசுவரர் திருச்சந்நதிக்கு அழைத் துச் சென்றுர். அப்போது இவர்" கூற்றுயின வாறுவிலக்ககலீர்' எனத் தொடங்கும் திருப்பதி கத்தைப் பாட, நோய் விலகியது. அத்துடன் இவருக்கு "திருநாவுக்கரசு" என்னும் பெயரை விண்மொழிபால் சிவபிரான் சூட்டினுர் இதன் பின் சைவநெறி நின்று திருவதிகையில் தங்கி யிருந்தார்.

*சமணர்கள் சூழ்ச்சி*

இதனை உணர்ந்த சமணர்கள் தம் சார்பில் இருந்த பல்லவ மன்னன் குண பரனிடம் (முதலாம் மகேந்திரவர்மன் கி. பி. 600 - 630) இவரை அழைத்துச்சென்று, முறை யிட்டு, நாவுக்கரசரை நீற்றையில் இட்டும், நஞ்சு கலந்த உணவை உண்பித்தும், யானையை விட்டு இடரச் செய்தும், "கொடு மைகளைச் செய்ய, இவையாவற்றிலும் இடர் இன்றி சிவபிரான் அருளால் தப்பினுர். கடைசி யாகக் கருங்கல்லில் கட்டி நடுக்கடலில் இவரை இட்டனர். இறையருளால் அக்கட்டு அவிழ்ந்து, அக்கல்லே தெப்பமாக மாற, திருப்பாதிரிப்புலியூரில் கரை சேர்ந்தார் பின் இவர் திருவதிகைக்கு வந்து பல ஆண்டுகள் தங்கி, கைத்தொண்டும் வாய்த்தொண்டும், செய்து வாழ்ந்து கொண்டிருந்தார்.

*தில்லையும் காழியும்*

பின்னர் தம் முதுமைப் பருவத்தில்

தொடர் யாத்திரையைத் தொடங்கி, தலங்கள் பலவற்றைத் தரிசித்துவரும் போது, திருப் பெண்ணாகடத்துத்தூங்கானை மாடத்தில் இடபம், சூலம் ஆகியகுறிகளைத் தம் இரு தோள்களில் வேண்டிப் பொறிக்கப்பெற்றார்; பின் தில்லைக்குவந்து, அங்கு உலகுய்ய நட மாடும் ஆடலரசைத் தரிசித்துத் தங்கியிருக் கையில், சீகாழிப் பதியில் மூவாண்டில் ஞானப்பால் அருந்திச் சிவஞானம் பெற்ற சம்பந்தரைக்காண விரும்பி வந்தபோது, அவரால் அப்பர் என அழைக்கப் பெற்று வர வேற்கப்பட்டார்.

### திருவடிச்சிறப்பு

பின் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு திருச்சத்திமுற்றத்தில் தம் தலைமீது சிவபிரானைத் திருவடிசூட்டுமாறு விண்ணப் பிக்க, இறைவனால் திருநல்லூரில் திருவடி சூட்டப்பெற்றார்.

### திங்களூர் அப்பூதி

பின் தன்னை வழிபடுதெய்வமாகப் போற்றி வாழ்ந்த, திருப்பழனம் திங்களூர் அப்பூதி அடிகள் இல்லம் சென்று தங்கி, அவருக்குப் பெருவாழ்வு அளித்தார், பின் பல தலங்களை யும் வணங்கித் திருவாரூரில் திருவாதிரை தரிசனவிழாக் கண்டு, பின் சம்பந்தருடன் இணைந்து தலயாத்திரையை மேற்கொண்டு வந்தபோது, திருவீழிமிழலையில் பஞ்ச காலத் தில் படிக்காசு பெற்றார்

### திருமறைக்காடு

இதன்பின் திருமறைக் காட்டிற்கு இரு வரும் வந்து, அங்கு அடைபட்டிருந்த மறைக் கதவினைத் திறக்கவும் அடைக்கவும் செய் தனர். பின்னர் சம்பந்தர் பாண்டிமாதேவி மங்கையர்கரசியாரின் அழைப்பினை ஏற்றுப், பாண்டிநாடு புறப்பட இவர் வடதிசை நோக் கித் தலங்கள் பலவற்றைத் தரிசித்து வந்த போது, வழிநடை இளைப்பால் வருந்திய இவருக்குத் திருப்பைஞ்ஞீலி என்னும் தலத் தில், சிவபிரான் கட்டமுது அளித்தார்.

### கயிலையாத்திரை

பின்னர் தம் யாத்திரையில் கொங்கு நாடு, நடுநாடு, தொண்டை நாடு ஆகியவற்றில் உள்ள தலங்களைத் தரிசித்து, திருக்காளத் தியை அடைந்தார். அங்கு பெருமானைத் தரிசித்தப்பின் இவருக்கு வடதிசையில் கயிலை மால்வரையில் உமாபதியை நேரில் கண்டு தரிசிக்கும் எண்ணம் எழ பலமலைகள், ஆறுகள், நாடுகள் இவற்றைக் கடந்து வாரணாசியை அடைந்தார். பின் தாம் ஒரு வராய் இமயத்தில் ஏறி நடந்து உறுப்புகள் தேய்த்து செயலற்றுக் கிடந்தார். அப்போது சிவபெருமான் ஒரு முனிவராய் இவர்முன் எழுந்தருளி இவரது இழந்த உறுப்புகளை மீண்டும் பெற்று எழச்செய்தார் பின் அங் கோர் வாவியில் இவரை மூழ்கச் செய்து, தென்னாட்டுத் திருவையாற்றில் ஓர் வாவியில் எழச் செய்து, கயிலைக் காட்சியைக் காட்டி யருளினார்.

### பூந்துருத்தி மடம்

பின்னர் இவர் திருவையாற்றுக்கு அருகில் உள்ள திருப்பூந்திருத்தியில் 'திங்களும் ஞாயி றும்தோயும்' திருமடம் ஒன்றை நிறுவி, அதன் கண் தங்கியிருந்தார். அவ்வமயம் பாண்டி நாட்டில் சைவம் தழைக்கச் செய்து வந்த சம் பந்தர், இவரை மீண்டும் வந்து சந்தித்து, பின் காழிமாநகரம் சென்றார்.

### பூம்புகலூர் இறைவனடி

நாவுக்கரசர் அதன் பின், திருப்பூந்துருத்தி யை விட்டு அகன்று, பாண்டி நாடு சென்று, அங்கு திரு ஆலவாய் முதலிய சிவப்பதி களைத் தரிசித்து, சோணாட்டுத்திருப்புகலூரை வந்தடைந்து தங்கிப், பல நாள் பணியுரிந்து, பின் ஒரு சித்திரை மாதச் சதய நாளில் பூம்பு கலூர்ப் புண்ணியனார் திருவடியைச் சேர்ந்தார்.

### நாவுச்சரசர் காலம்

இவ்வாறு எண்பத்தோராண்டுகள் வாழ்ந்த இவர், சிவனடிசேர்ந்த ஆண்டு ஏறத்தாழ் கி.பி, 656 ஆகும் என அறிஞர்கள் கூறுவர். விரிவான இவரது வரலாற்றைச் சேக்கிழார் பெரிய புராணத்தில் 429 பாடல்களால் சிறப் பித்துப் பாடியுள்ளார்.

### அப்பர் வடிவம்

இவருடைய திருவுருவப் பொலிவை "சிந்தை இடையறு அன்பும், திருமேனிதனில் அசைவும், கந்தைமிகையாம் கருத்தும், கை

உழவாரப்படையும்,வந்திழிகண்ணீர்மழையும், வடிவிற்பொலிதிருநீறும் அந்தமிலாத்திரு வேடத்தரசும்......'' ஞான 270)'' தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ் வடமும், நாயகன் சேவடி தைவருஞ் சிந்தை யும், நைந்துருகிப் பாய்வது போல் அன்பு நீர் பொழிகண்ணும், பதிகச் செஞ்சொல்மேய செவ்வாயும் உடையார் ..'' (நாவு-140) ''மார்பாரப் பொழி கண்ணீர் மழைவாரும் திரு வடிவும், மதுரவாக்கில் சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின் மாலைகளும், செம்பொற்றுளே சார்வான திருமனமும், உழவாரத்தனிப்படை யும், தாழுமாகிப் பார்வாழத் திருவீதிப் பணி செய்து பணிந்துஏத்திப்பரவிச் செல்வார்.'' (நாவு-225) என்று சேக்கிழார் கூறுமாற்றான், இவரது கோலம் முதுபெரும் வயதால் தளர்ந்து உள்ளத்தெழுந்த பக்தி வெள்ளம் கண்ணீர் கசிய, மென்ரெண்டராய் விளங்கிய கோலம்' என அறியலாகும்.

### இவரது திருப்பெயர்கள்

இளமையில் இவருக்குப் பெற்றோர்கள் இட்ட பெயர்-மருள்நீக்கியார், பின் சமண்சார் பில் தருமசேனர், சூலை நீங்கிப்பதிகம் பாடத் தொடங்கிய பின் சிவபிரான் இட்ட பெயர் திருநாவுக்கரசர், பின், சம்பந்தரால் அழைக் கப்பெற்ற பெயர் அப்பர் முதலாயினவாகும். சேக்கிழார் பெருமானால் தாண்டக வேந்தர், தாண்டகச் சதுரர், வாக்கின் மன்னர், வாகீசர், எனவும் குறிக்கப்படுகின்றார். மேலும் வட மொழி, அகத்திய பக்த விலாசம், உபமந்யு பக்தவிலாசம் ஆகிய நூல்களில் ரஸன ராஜஹா, ஜிஹ்வாராஜஹா என்று பலவாறாக குறிப்பிடப்பெறுகிறார்.

### பாடிய பதிகங்கள்

'சொற்குறுதிக்கு அப்பரெனச் சொல்' லெனப் போற்றப்பெறும் அடிகள் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என வாழ்ந்து நாளும் நம்பன் உறையும் திருக்கோயில்கள் தோறும் சென்று உழவாரத் தொண்டு செய்து பாடிய பதிகங்கள் 4900 என்பர். 'இணை கொள் ஏழேழு நூறு இரும் பனுவல் ஈந்தவன்' என நம்பியாரூரரும், 'பதிகம் ஏழேழு நூறு பகரும் மாகவியோகி' 'என நம்பியாண்டார் நம்பியும் 'ஒரு நாற்பத்தொன்பதிநுயிரம்' என உமாபதி சிவமும் கூறியுள்ளனர். ஆயினும் தற்போது பண் முறையில் நூற்றுப்பதிமூன் றும் திருக்குறுந் தொகை நூறும் தாண்டகம் தொண்ணூற்றொன்பதும் ஆக **முந்நூற்றுப் பன்னிரெண்டு திருப்பதிகங்களே** கிடைக்கப் பெற்றுள்ளன.

### பாடல் பெற்ற பதிகள்

இன்று கிடைக்கப் பெறும் பதிகங்களுள் இவரால் பாடப்பெற்ற தலங்கள் **நூற்று இரு பத்து ஐந்து** ஆகும். அவற்றுள் ஒரே பதிகம் மட்டும் பெற்ற தலங்கள் எழுபத்து ஆறு. இரண்டு பதிகங்கள் பெற்ற தலங்கள் இருபத்து மூன்று மூன்று பதிகங்கள் பெற்ற தலங்கள் ஏழு, நான்கும் நான்குக்கு மேற்பட்ட பதிகங் களைப் பெற்ற தலங்கள் பத்தொன்பது ஆகும். அவற்றுள்ளும் மிகுதியான திருப்பதி கங்களை உடைய திருப்பதிகள் திருவதிகை யும் திருவாரூரும் ஆகும்.

### வரலாற்று நூல்கள்

நடு நாட்டு அடியவர் எழுவருள் ஒருவராயும், வேளாண் குலத்துதித்த அடியவர் பதின்மூவரில் ஒருவராயும், பெரியபுராணத்துள் வைத்து எண்ணப் பெறும் இவர் வரலாற்றை வடமொழியில் அகத்திய பக்தவிலாசம் உப மந்யுபக்த விலாசம் ஆகிய நூல்களும், கன்ன டத்தில் சிவானந்தரெகளே, ரிஷபேந்திர விஜயம், பசவ புராணம் ஆகிய நூல்களும்' தெலுங்கில் சிவபக்த லீலாம்ருதம் என்னும் நூலும் எடுத்தோதிச் சிறப்பிக்கின்றன. பரத கண்ட முழுமையும் யாத்திரை செய்த சிறப் பினையுடைய அப்பர், எல்லா தலங்களுக்கும் நேரில் சென்று பாடியவர் என்னும் பெருமை யினைப் பெற்றவர் ஆவார்.

# திருஞானசம்பந்தர் வரலாறு

*இன்னிசையால் தமிழ்*

வேதநெறி தழைத் தோங்க, மிகு சைவத் துறை விளங்க, பூதலத்தில் அவதரித்து, நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பிய வயற் காழி நாதன், வேதியன், ஞானசம்பந்தனை, 'வம்பறா வரிவண்டு மணநாற மலரும் மது மலர் நற்கொன்றையான் அடியலாற் பேணா, எம்பிரான் சம்பந்தன்' என்று ஏத்தி மகிழ் கின்றார் சுந்தரர்.

*பிள்ளையார் நால்வர்*

தன்னடைந்தார்க்கு இன்பங்கள் தரு வானை, தத்துவனை, இனிய பதிகங்களால் போற்றித் துதித்த சம்பந்தரை, சிவகுமாரர் வரிசையில் வைத்துப் போற்றுவது சைவசமய மரபாகும்.

சிவகுமாரர்களாகிய விநாயகரையும் முரு கனையும் முறையே மூத்த பிள்ளையார், இளைய பிள்ளையார் எனக்கூறும் சைவஉலகு, இம்மண்ணுலகத்தில் அவதரித்த சண்டே சுரப்பெருமானைச் சேய்ஞலூர்ப் பிள்ளையார் எனவும், ஞானசம்பந்தப் பெருமானைக் காழிப் பிள்ளையார், ஆளுடைய பிள்ளையார் எனவும் சிவகுமாரர்கள் வரிசையில் வைத்து ஏத்திக் கொண்டாடுகிறது.

*திரு அவதாரம்.*

ஆறு, ஏழாம் நூற்றாண்டுகளில் தமிழ் நாட்டில் புத்தசமண ஆதிக்கத்தை ஒழித்து, செம்மை வெண்ணீற்றின் ஒருமையையும், வேத நெறியையும், திருவைந்தெழுத்தையும், ஒளிரச் செய்த பெருமை, ஏனைய அடியவர்களினும் சம்பந்தருக்கே உரியதாகும். இத்தகைய இவ்வடியவர் பெருமான் சீகாழிப்பதியில் கௌணியர்கோத்திரத்தைச் சேர்ந்த சிவபாத இருதயர், தில்லையம்பலவனை வேண்டிச் செய்த தவத்தால், ஏழாம் நூற்றாண்டின் இடையில் (ஏறத்தாழ 639இல்) ஒரு சித்திரை மாதத் திருவாதிரை நட்சத்திரத்தில், அருக்கன் முதல் கோள்கள் அனைத்தும் அழகிய உச்சத்தில் இருக்க, பகவதியாரின் மணி வயிற்றில் திரு அவதாரம் செய்தருளினார்.

*தலயாத்திரை*

பின்னர் தம் மூன்றாம் வயதில் அம்பிகை யின் பொற் கிண்ணத்தில் ஞானப்பால் அருந் திய இவர், சைவ நன்னெறி நாளும் தழைத்துச் சிறந்திடவும், பரசமயங்கள் நீறாகவும், தேவார மழை பொழியத் தொடங்கினார். திருக்கோலக் காவில் பொற்றாளம் பெற்ற இவர், திருநெல் வாயில் அரத்துறையில், ஈசன் அளித்த முத்துச் சிவிகையில் ஏறித் தமிழகம் எங்கணும் உள்ள தலங்கட்கு யாத்திரை செய்து நாளும் இன்னி சையால் தமிழைப் பரப்பி வருவாராயினார்.

*செயற்கருஞ் செயல்கள்*

திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லிமழ வன் மகளுக்குற்ற முயலகன் நோயைத் தீர்த் தது, திருக்கொடிமாடச் செங்குன்றூரில் தம் அடியவர்களைப் பற்றிய குளிர்ச்சுர நோயைத் தீர்த்தது, திருப்பட்டீச்சரத்தில் முத்துப்பந்தர் பெற்றது, திருவாவடுதுறையில் தம் தந்தை யார் செய்ய விரும்பிய சிவ வேள்விக்கு ஆயிரம் பொன் பெற்றது, திருமருகலில் விடந்தீண்டி, இறந்த வணிகனை உயிர்ப்பித் தது, திருவீழிமிழலையில் பஞ்சகாலத்தில் படிக் காசு பெற்றது, திருமறைக்காட்டில் நீண்டநாள் அடைக்கப்பட்டிருந்த கதவை நாவரசர் திறந்த பின் என்றும் அடைக்கவும் திறக்கவும் செய்தது,

திரு ஆலவாயில் சமணர்கள் தம் திரு மடத்திற்கு இட்ட தீயை மாறனுக்கு வெப்பு நோயாகப் பற்றச் செய்து, பின் அதனைப் போக்கி, சமணர்களை அனல்வாதம், புனல் வாதம் ஆகியவற்றில் வென்றது, திருக் கொள்ளம்பூதூரில் கோலின்றியே ஓடம் விட்டது, திருத்தெளிச்சேரியில் புத்தர்களை வாதில் வென்றது, திருஓத்தூரில் ஆண்பனை களைப் பெண்பனைகள் ஆக்கியது, திரு மயிலையில் பூம்பாவையின் எலும்பைப் பெண் ணுருவாக்கியது. ஆகிய செயற்கருஞ் செயல் களை நிகழ்த்தியருளினார்.

### இவரது காலம்

இந்நில வுலகில் பதினாறு ஆண்டுகளே வாழ்ந்து, முடிவில் இவர் திருநல்லூர்ப் பெரு மணம் என்ற தலத்தில் திருமணக்கோலத் துடன் சிவசோதியுட் கலந்தார். அக்காலம் ஏறத்தாழ கி.பி. 655 ஆகும் என அறிஞர்கள் கூறுவர். ஆதலின் இவர் வாழ்ந்த காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டு என்பது தெளிவு

### திரு உருவப் பொலிவு

இவர் பதினாறு ஆண்டுக்காலமே இந்நில உலகில் வாழ்ந்தவர். இவர் தம் திரு உருவம் ஞான அமுது உண்ட மூன்று வயது நிலை யிலேயே கையில் பொற்றாளத்துடன், சிற்ப ஓவிய வடிவில் எங்கும் காணப்படுகிறது. இருப்பினும் இவரது ஞான வடிவைச் சேக்கிழார் காட்டும் தன்மை மிகவும் போற்று தற்குரியது.

திருஆலவாயில் பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச் சிறையாரும், இவரைக் கண்டு களித்த தன்மையை "ஞானத்தின் திருவுருவை, நான் மறையின் தனித் துணையை, வானத்தின் மிசையின்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தை தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர் போற்றும், கானத்தின் எழுபிறப்பைக் கண் களிப்பக் கண்டார்கள்" ஞான. 728 மேலும் மதுரைப் பதிகத்தில் 'பானல் வாயொரு பாலன் ஈங்கிவன்' என சம்பந்தரே தம் இளமைத் தோற்றத்தைக் குறித்திருத்தல் காண லாம்.

### இவரது திருப்பெயர்கள்

இவர் தாம் பாடிய திருப்பதிகங்கள் தோ றும் தம் பெயரை வைத்துப் பதிகப்பயனையும் கூறியுள்ளார். அவ்வாறு குறிப்பிட்டுள்ளவற் றில் சில பெயர்களாவன :-

நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன், நான் மறை கற்றவன், காழியர் மன்னன்' 'சிவஞான சம்பந்தன்' 'நான் மறை ஞானசம்பந்தன் 'தமிழ் விரகினன்' 'மறை ஞான ஞானமுனி வன்.

### பாடிய திருப்பதிகங்கள்

இவர் பாடிய திருப்பதிகங்கள் பதினாறு யிரம் என்பதனை 'பன்னு தமிழ்ப் பதினாற யிரம் நற்பனுவல் மன்று புவியவர்க்கு வாய்ப்ப வந்நங்கவதரித்த வள்ளலை' என்று நம்பி யாண்டார் நம்பியும் 'பரசமயத் தொகைகள் மாளப் பாடினார் பதிகங்கள் பாவிலொன்றாம் பதினாறாயிர முளதாப் பகரு மன்றே' என்று திருமுறை கண்ட புராண முடையாரும் கூறு மாற்றான் அறியலாம். ஆயினும் திருமுறை கண்ட காலத்தில் முன்னூற்று எண்பத்து நான்கு திருப்பதியங்களே கிடைக்கப் பெற்றுத் தொகுக்கப் பெற்றன என்பதை "பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிக முன்னூற்றெண் பத்து நான்கில் இலங்கு திருமுறை மூன்று' என்று கூறப்படுவதால் உணரலாகும்.

### பண்முறைப் பகுப்பு

நட்டபாடை முதல் மேகராகக் குறிஞ்சி யீறாகப் பண் ஏழும், பண் அமைதி பெறாத யாழ்மூரியுமாகப் பண் எட்டிற்குமான நூற்று முப்பத்தாறு பதிகம் முதல் திருமுறையாகவும், இந்தளம் முதல் செவ்வழி ஈறாக உள்ள பண் ஆறுக்குமான திருப்பதியம் நூற்றியிருபத்து இரண்டும் இரண்டாந் திருமுறையாகவும், காந்தார பஞ்சமம் முதல் அந்தாளிக்குறிஞ்சி யீறாகப் பண் ஒன்பதுக்குமான திருப்பதியம் நூற்றுயிருபத்தைந்தும் மூன்றாந் திருமுறை யாகவும், வகுக்கப் பெற்றுள்ளன.

### பாடல் பெற்ற பதிகள்

இவரால் பாடப்பெற்ற பதிகள் இருநூற்று இருபதாகும். அவற்றுள் சீர்காழி அறுபத் தேழு, திருவீழிமிழலை பதினான்கு, மதுரை ஒன்பது, திருமுதுகுன்றம் ஏழு, திருவிடை மருதூர் ஆறு பதிகங்களையும் பெற்றுச் சிறந் துள்ளன. திருவாரூர் முதலான நான்குபதிகள் ஐந்து திருப்பதிகங்களையும், திருநள்ளாறு நான்கு பதிகங்களையும், திரு அம்பர்மாகாளம் முதலான எட்டுபதிகள் மூன்று திருப்பதிகங் களையும், திருவான்மியூர் முதலான இருபத் தைந்து பதிகள் இரண்டு பதிகங்களையும் ஏனைய பதிகள் அனைத்தும் ஒரேயொரு பதி கம் உடையனவாகவும் காணப்படுகின்றன.

கிரியை நெறி போற்றும் சற்புத்திர மார்க்க நெறிநின்று இறைவனைப் பாடிய ஞான சம்பந்தர் சோணாட்டு அடியவர் முப் பத்தேழு பேரில் ஒருவராகவும் ; அந்தணர் குலத்துதித்த அடியவர் பன்னிருவருள் ஒரு வராகவும் பெரியபுராணத்துள் வைத்து எண்ணப்படுகிறார்.

# சுந்தரர் வரலாறு

*ஆலால சுந்தரர்*

'நயத்திற்குச் சுந்தரனார்' என்று சிவன் ருட் செல்வர்களால் ஏத்தப் பெறுபவர் சுந்தர மூர்த்தி சுவாமிகள். இவர் முற்பிறவியில் திருக்கயிலையில் சிவபிரானுக்கு அணுக்கத் தொண்டராயிருந்த ஆலாலசுந்தரர் ஆவார். ஒரு நாள் கயிலையில் உமாதேவியாரின் சேடியர் கமலினி, அநிந்திதை இருவரையும் கண்டு அவர்கள் பால் தம் சிந்தையைச் செலுத்தினார். இதனால் சிவபிரான் இவரை மண்ணுலகத்தில் பிறந்து அவ்விருவருடன் வாழ்ந்து வரப்பணித்தார்.

*தடுத்தாட் கொள்ளுதல்*

இதன் காரணமாய்,செந்தமிழ் நாட்டுத் திருமுனைப்பாடி நாட்டில், திருநாவலூரில், ஆதிசைவ அந்தணர் சடையனாருக்கும் இசை ஞானியாருக்கும் மகவாய்த் தோன்றி, அந் நாட்டு மன்னன் நரசிங்க முனையரையரால் வளர்க்கப் பெற்றுத் திருமணப்பருவம் அடைந்தார். இவ்வமயம் தந்தை சடையனார் தம் குலத்துதித்த நங்கை ஒருத்தியைத் திருமணம் செய்து வைக்கச் செயல்முறைகள் நடந்த சமயம், சிவபிரான் ஒரு முதிய அந்தணராய் வந்து, அத்திருமணத்தைத் தடுத்து ஆட் கொண்டு, திருவெண்ணெய் நல்லூருக்கு அழைத்துச்சென்று அருள்புரிய, 'பித்தா பிறை சூடி பெருமானே அருளாளா' எனத்தொடங்கும் திருப்பதிகத்தை முதன் முதலில் பாடினார்.

*ஆரூரே தலைமையிடம்*

பின் தலயாத்திரையாக வந்த இவருக்குத் திருவதிகையில் சிவபிரான், இவரது முடியில் தம் திருவடியைச் சூட்டினார். பின் காண முத்தி தரும் தில்லைக்கு வந்து, இந்து வாழ் சடையான் ஆடும் திருக்கூத்தினைக் கண்டு மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார் பின் வழியில் உள்ள தலங்களைக் கண்டு பிறக்க முத்தி தரும் திருவாரூர் வந்து, அங்கு பூங்கோயிலில் வீற்றிருந்தருளும் ஆழித்தேர்வித்தகனைப் பணிந்து, அவருக்குத் தோழனாம் தன்மையை அடைந்து, தம்பிரான் தோழர் எனப் பெயர் பெற்றதுடன், அங்கு வசித்து வந்த பரவையாரை மணந்தார். பின் இத்தலத்தில் சைவத்தின் சீவ ஒளியாய்த் திகழும் 'திருத்தொண்டத் தொகை' என்னும் திருப்பதிகத்தைப் பாடி அத்தலத்தைத் தலைமை இடமாகக் கொண்டு தலயாத்திரைகள் பல செய்து வந்தார்.

*இறையருட் செயல்கள்*

திருப்புகலூரில் செங்கல்லைப் பொன்னாக்கித் தந்தது, குண்டையூரில் நெல்மழை பொழியச் செய்து பின் அதனை ஆரூரில் இவரது இல்லத்தில் சேர்ப்பித்தது, திருமுதுகுன்றத்தில் பொன்னைக் கொடுத்து அதனை ஆற்றில் இடச் செய்து, அதனைப்பின் திருவாரூர் குளத்தில் பெறச் செய்தது,திருக்குருகாவூரிலும் திருக்கச்சூரிலும் இவரது பசிநீங்க தலப்பயணவழியிடை சோறு அளித்தது, திருமுதுகுன்றம் நோக்கிச் சென்ற இவரை வழிமறித்து திருக்கூடலையாற்றூருக்கு அழைத்துச் சென்றது, திருஒற்றியூரில் சங்கிலியாரைத் திருமணஞ் செய்வித்தது, அப்போது செய்த சத்தியம் தவறியதால் கண்களை இழந்து தவித்த இவருக்கு, மீண்டும் கண்களைத்தம் அருளால் பெறச் செய்தது,

திருவாரூரில் இவருடைய முதல் தேவியார் உற்ற கோபத்தைத் தூதராகச் சென்று போக்கியது, சேரமானைத் தோழராகப்பெற்றுஅவருடன் இணைந்து சென்ற தலப்பயணத்தில் திருவையாறு சென்றபோது, காவிரி வெள்ளத்தை விலகச் செய்தது; சேரமான் அளித்த பெருநிதியங்களை எடுத்துக் கொண்டு, ஆரூரை நோக்கி வந்தபோது, பூதகணங்களை விட்டுக் கவரச் செய்து பின் அளித்தது, திருப்புக்கொளியூர் அவிநாசியில் முதலையுண்ட பாலனை இவரது பாடலைக்கேட்டு வெளிவரச் செய்தது ஆகியவை தம்பிரான் தோழரான சுந்தரருக்கு இறைவன் உடன் இருந்து ஆற்றிய அருட் பெருஞ் செயல்களாகும்.

*திருக்கயிலையைச் சென்று சேர்தல்*

இவ்வாறு பதினெட்டு ஆண்டுகள் வாழ்ந்து இறுதி இரண்டாண்டுகள் செந்தமிழ் நாட்டின்

இவ்வேறு பகுதிகளில் யாத்திரைகள் மேற் கொண்ட இவர், திருவஞ்சைக் களத்தில் இருந்து,ஒருஆடி மாதம் சுவாதியில்,சிவபிரான் அனுப்பியவெள்ளையானை மீது ஏறி,சேரமான் தோடர, பூதஉடலுடன் திருக்கயிலை மாமலை யைச் சென்றடைந்தார்.

### பாடிய திருப்பதிகங்கள்

தம்பிரான் தோழரான இவர் பாடிய திருப் பதிகங்கள் மூப்பத் தெண்ணாயிரம் எனினும் ; பண் மூறையால் தொகுத்த போது நூறு திருப் பதிகங்களே கிடைக்கப் பெற்றன எனத்திரு மூறை கண்ட புராணம் குறிக்கின்றது. ஆக இவர் பாடியனவாக இன்று கிடைக்கப் பெறும் பதிகங்கள் 100 ஆகும். இப்பதிகங்களை இந்தளம் முதல் பஞ்சமம் ஈறாகப் பதினேழு பண்களாக வகுத்துள்ளனர் இசைவாணர்கள்.

### பாடல் பெற்ற பதிகள்

நம்பியாரூரர் பாடியுள்ள பதிகங்கள் நூறனுள் பொதுவாக உள்ள ஐந்து திருப் பதிகங்கள் நீங்கலாக எஞ்சிய தொண்ணூற் றைந்தும் திருவெண்ணெய் நல்லூர் முதல் திருநொடித்தான்மலை யீறாக எண்பத்து நான்கு திருப்பதிகளைக் குறித்துப் பாடப் பட்டுள்ளன.

### பெரிய புராணத்துள் இவர் வரலாறு

'சுந்தரர் புராணம்' என்று கூறத்தக்க அளவு இவரது வரலாற்றை விரித்துரைக்கும் காப்பியமான பெரிய புராணத்துள் திருமலைச் சிறப்பு, தடுத்தாட் கொண்ட புராணம், ஏயர் கோன் கலிக்காமர் புராணம், கழறிற்றறிவார் புராணம்,வெள்ளானைச் சருக்கம்,ஆகியஐந்து பகுதிகளில் சேக்கிழார் வகுத்துரைக்கின்றார்.

### இவரது திரு உருவப் பொலிவு

சிவனடியார் இனத்தைச் சேர்ந்தவர் எனி னும், அரசர் கோலத்துடன் அணி கலன்கள் சிறப்புற அணிந்து விளங்கியவர். இவரது திருவுருவத்தின் பொலிவினை ஆருர்ப்பரவை யார் தம் நினைவில் வந்ததைக் கூறவந்த சேக்கிழார்.

"மூன்னே வந்து எதிர் தோன்றும் முரு கனோ? பெருகொளியால் தன்னேரில் மார னோ? தார்மார்பின் விஞ்சையனோ? மின்னேர் செஞ்சடை அண்ணல் மெய்யருள் பெற்றுடை யவனோ ? என்னே ! என் மனம் திரித்த இவன் யாரோ என நினைந்தார்" என்னும் பாடலின் வாயிலாக முருகனையும், மன்மதனையும், விஞ்சையரில் ஒருவராயும் இவர்பொலிந்த பெற்றியைப் புலப்படுத்து கின்றார்.

### இவரது திருப்பெயர்கள்

இவரது திருப்பெயர் இந்நில வுலகில் சுந்தர மூர்த்தி என்று வழங்கப் பெறினும் இது இவர் திருக்கயிலையில் பண்டு இருந்தபோது பெற்ற ஆலால சுந்தரர் என்னும் பெயரே யாகும்

இவ்வுலகில் இவரது பெற்றோர் இட்ட பெயர் நம்பியாரூரர் ஆகும். இவரது புராணத் துள்ளும் இவரது பதிகத்திருக்கடைக்காப் பிலும் ஆரூரன், சிங்கடியப்பன், வனப்பகை யப்பன், நாவலூரன், தம்பிரான்தோழன் சேர மான்தோழன், வன்றொண்டன்,நம்பி, நாவலூ ராளி, நாவலர் கோன், நாவல் ஆரூரன் என்று பலவாறாக இவர் பெயர் கூறப்பட்டுள் ளன.

### இவரது காலம்

நடுநாட்டு அடியவர் எழுவருள் ஒருவ ராயும், ஆதிசைவ மரபினர் நால்வருள் ஒருவ ராயும் வைத்து எண்ணப் பெறும் சுந்தரர், யோகநெறியைப் போற்றி சகமார்க்க நெறி நின்ற மாண்பினர் ஆவார். வரலாற்று ஆசிரியர்களான K. S. சீனிவாசபிள்ளை, T.A. கோபிநாதராயர், டாக்டர் மீனாட்சி ஆகியோர் இவரது காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கூறுவர். M.S. பூரணலிங்கம் பிள்ளை எட்டாவது நூற்றாண்டு எனவும், கா. சுப்ரமணிய பிள்ளை எட்டாவது நூற்றாண்டின் பிற்பகுதி எனவும் ஆராய்ந்துரைக்கின்றார்கள். தி.வை. சதாசிவ பண்டாரத்தார், ஒளவை துரைசாமி பிள்ளை ஆகியோர் இவர் வாழ்ந்த காலம் பல்லவ மன்னன் இரண்டாம் நரசிம்மவர்மன் (கி.பி. 690—710) காலமேயாகும் என்று நிலை நிறுத்தி ஏழாம் நூற்றாண்டின் இறுதியிலும் எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இவர் வாழ்ந்தவராவார் என்று வலியுறுத்திக் கூறுகின்றனர்.

# மூவர் தம் யாத்திரை முறைமை

*யாத்திரைக்கு மூவர்*

'யாத்திரைக்கு மூவர்' என வழக்கில் இருந்துவரும் பழமொழிக்கு, உலகியல் நோக்கில் பொருள் கூறுவோர் கூறும்பொருள், "நெடிய பயணங்களுக்கு ஒருவர் அல்லது இருவராய்ச் செல்வதைவிட, மூவராக இணைந்து செல்வதே ஒருவருக்கொருவர் துணையாய் இருந்து பயணத்தை நலமாக முடித்துவரப் பல வகையிலும் சௌகரியமானது" என்பதே யாகும். சமய நோக்கில் பொருள் கொள்ளுங்கால் 'மூர்த்தி தலம் தீர்த்தம்' என முறையாய் யாத்திரை மேற் கொண்ட தேவார முதலிகளையே அப்பழமொழி குறிக்கும் எனல் சாலும்.

*பட்டினத்தார் காட்டும் மூவர்*

அறுபான் மும்மை நாயன்மார்களுள் செயற்கருஞ் செயல்கள் செய்தவர்களாக, வாளால் மகவறிந்து ஊட்டிய சிறுத்தொண்டரையும், சூளால் இளமை துறந்த திருநீலகண்டரையும், தன் கண்ணை இடந்து அப்பிய கண்ணப்பரையும், பட்டினத்து அடிகள் குறிப்பிடுகின்றார். அவர்களுள் சிறுதொண்டர் தம் மனைவி மகனொடும், திருநீலகண்டர் தன் மனைவியொடும், கண்ணப்பர் பிரம்மச்சரிய நிலையில் தனித்தும், மேற்காணும் மூவகை அருஞ்செயல்களை, மூவகை நிலையில் இருந்து, ஆற்றியுள்ளனர் என்பது நோக்குவார்க்கு நுண்ணிதின் விளங்கும் உண்மை யாகும்.

*மூவரின் மூவகை நிலைமை*

அதுபோன்று முத்தமிழ் விரகினர் மூவருள் திருஞானசம்பந்தர், பிரம்மச்சரிய நிலையிலும் சுந்தரர் இல்லற நிலையிலும், நாவரசர் துறவற நிலையிலும், ஆக மூவரும், மூவகை நிலையிலிருந்து, தல யாத்திரையை மேற்கொண்டு ஒழுகி, "யாவரேயாயினும் தத்தம் சமய நெறிகளைத் தத்தம் நிலைக்கேற்றவாறு மேற்கொண்டொழுகுதல் வேண்டும்" என்ற தத்துவ நெறியினை உணர்த்திச் சென்றுள்ளனர்.

## சம்பந்தர் யாத்திரை முறைமை

*இருவகை யாத்திரை*

இந்நிலவுலகில் ஈரெட்டாண்டுகள் வரை வாழ்ந்த சம்பந்தர் தமக்கு ஐந்து வயதாகும் வரை, தம் தந்தையார் தோளில் அமர்ந்தும், பின்னர் பதினாறு வயது வரை முத்துச்சிவிகை ஊர்ந்தும், தெற்கே இராமேச்சுரம் முதல் வடக்கே திருக்காளத்திவரை உள்ள பல தலங்களுக்கும் யாத்திரையாகச் சென்று தென்னாடுடைய சிவனைப் பாடிப் பரவியுள்ளார்.

*மேற்கொண்ட யாத்திரைகள் ஏழு*

ஒருவகைத் திட்டத்துடனும் முறையுடனும் கூடிய இவரது ஏழுயாத்திரைகளும் இவர் பிறந்த பதியாகிய சீகாழித் தலத்தை மையமாகக் கொண்டே அமைந்துள்ளன. முதல் யாத்திரையாக, ஞானப்பால் அருந்தியதும், சீகாழியில் இருந்து திருக்கோலக்கா சென்று பொற்றாளம் பெற்று மீண்டார். (ஞான. 100-105); பின்னர் இரண்டாம் யாத்திரையாக திருநனிபள்ளி முதலாய தலங்களுக்குச் சென்று மீண்டதும்; (ஞான. 112-117) மூன்றாம் யாத்திரையாகத் திருமயேந்திரப்பள்ளி முதலான தலங்களைத் தரிசித்து மீண்டதும், (ஞான. 129-30) ; நான்காம் யாத்திரையாக சீகாழி, தில்லை, நெல்வாயில்அரத்துறை திருவேய்ஞலூர் ஆகிய தலங்களுக்குச் சென்று

